REGD. No. TN MS (C) 244
ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS)
Phone: 812818
4 பக்கம் விலை 30

**தாய் மொழி**

குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு தாய்ப்பால் எவ்வளவு இன்றியமையாததோ அவ்வளவு இன்றியமையாதது மனிதனின் மன வளர்ச்சிக்குத் தாய்மொழி,







மலர்: 3 (●) சென்னை 23—2—1979 வெள்ளி (★)❋●❋(★) வெளியீடு: 24—2—1979 சனி (●) இதழ்: 127

# என்றும் மறையாத அந்த கம்பீரம்

அந்த ரீங்காரம் இன்னும் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது!

1972 நவம்பர்!

நமது கழகமேடை

"கறுப்பு சிவப்பு துண்டு எனக்குப் போடப்படுவதைப் பார்க்கும்போது ஏதோ தாய் வீட்டு சீதனம் கிடைத்ததைப்போல மகிழ்கிறேன்!" என்று அவர் பேசிய வாசகம் இன்றும் காதுகளில் வட்டமிடுகிறது,

புரட்சித்தலைவரைப் பற்றிய அவதூறுகளையெல்லாம் பொடிப் பொடியாக்கி—எதிரிகளை திக்கு முக்காட வைத்த அந்த கம்பீரம் இன்றும் மறையவில்லை.

"அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தை அழிக்க நினைப்பவர்கள் தேர்க்காலில் சிக்கிய பூசணி போல நசுங்கிப்போவார்கள்" என்று அவர் சொன்ன ஆரூடம் இந்த நெஞ்சங்களை விட்டு அகலவில்லை.

அவரை சீண்டினார்கள்.

அவரோ அசையவில்லை! மாறவில்லை,

கட்சிக்குஉள்ளும் வெளியிலும் ஒரு பொது நோக்கத்துக்காக தன்னை அவர் அர்ப்பணித்துக்கொண்டார்,

தமிழக பொது வாழ்வில் நன்னெறிகளையெல்லாம் ஒதுக்கித்தள்ளி விட்டு தீயநெறிகளின் முழுவடிவமாக விளங்கியவர்களின் முகத்திரையைக் கிழித்து எறிவதே தனது பணி என்று இறுதி வரை அவர் முழங்கினார்,

அதில் அவர் என்றும் தயக்கம் காட்டியதில்லை

விடியப்போகிற பொழுது ஒவ்வொன்றும் உங்களுக்கு பேரிடியாக விளங்கப் போகிறது என்று எதிர் முகாமைப் பார்த்து அவர் தீர்க்க தரிசனத்துடன் கூறினார்!

அவருடைய வார்த்தைகள் பலித்தன.

அவற்றைக்காண அவர்தான் இல்லை,

காங்கிரசின முக்கிய பொறுப்பில் இருந்த போதிலும் தமிழக அரசியலைப்பற்றி சம்பத் போட்ட கணிப்புத்தான் சரியானது என்பதை காலம் உணர்த்தி வருகிறது,

எந்த தீயசக்திகளை எதிர்த்துப் புரட்சித் தலைவர் போர்ப் பிரகடனம் செய்தாரோ—அந்த தீயசக்திகளை நாட்டுக்கு அடையாளம் காட்ட அரும்பணியாற்றினார் சம்பத.

அந்தப் போர் இன்னும் முடியவில்லை அந்த தீயசக்திகளை எதிர்த்து புரட்சிததலைவரின் பட்டாளம் இன்னும் தொடர்ந்து போராடிவருகிறது

இந்தப் போராட்டப் பாதையில் தொடர்நது செல்லும் நமக்கு அமரர் சம்பத்தின் நினைவு எப்போதும் பசுமையாக இருக்கும்!

## புதிய நில உச்சவரம்பு சட்டத்தை செயல்படுத்தி

# 40000 ஏழைகட்கு நிலம்

## கழக அரசு தீவிர நடவடிக்கை அமைச்சர் எஸ். டி. எஸ். தகவல்

**சென்னை, பிப், 23- அரசு கொண்டு வந்துள்ள நில உச்ச வரம்பு திருத்தச்சட்டத்தின் மூலம் 80 ஆயிரம் ஏக்கர் உபரி நிலம் கிடைக்கும் அதை 40 ஆயிரம் பேருக்கு கொடுக்க இருக்கிறோம் என்று அமைச்சர் எஸ் டி எஸ் சட்டசபையில் தெரிவித்தார்.**

நிலஉச்சவரம்பு திருத்த சட்ட மசோதாமீது நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து வருவாய் துறை அமைச்சர் எஸ் டி எஸ் பேசுகையில் கூறியதாவது:

இது முக்கியமான சட்டம் கழக ஆட்சியில் முதலாவதாககொண்டுவரப் படுகிற சட்டம் இது.

அவசரம் அவசரமாக நிறைவேற்றக் கூடாது என்பதால் போதுமான அவகாசம் தரப்பட்டது

பொதுவாக எல்லாகட்சி உறுப்பினர்களும்வரவேற்று பேசியிருக்கிறார்கள்.

இது போன்ற நிலச் சீர் திருத்த சட்டங்கள் இன்னும்வருகின்றன அப்போது உறுப்பினர்கள் எதிர்த்துப் பேசினாலும், இந்த அரசு செய்ய வேண்டியதற்கு பத்து சதவீத நேரம் முழுமையான கருத்தை சொன்னால் அது எங்களுக்கும் பயனுள்ளதாக இருக்கும், மக்களுக்கும் பயனுள்ளதாக இருக்கும்.

நேற்று இங்கே பேசியவர்கள் காங்கிரஸ் அரசு' திமுக அரசுஆகியவற்றைப் பற்றி பேசினார்கள். பினாமி நிலம் பற்றி கூறினார்கள்

பினாமிமுறை உருவான நேரம் காலம் ஆகியவற்றை உறுப்பினர்கள் சிந்தித்து பார்க்க வேண்டும்

இந்தசட்டத்தை நேற்று தி.மு.க. உறுப்பினர்கள் ஆதரிக்காமலும் எதிர்க்காமலும் பேசினார்கள் அதற்கு காரணம் அவரது கட்சித் தலைவர் இல்லாததுதான் என்று நினைக்கிறேன்

இன்றைக்கு எதிர்கட்சித் தலைவர் வரவேற்பதாக சொல்லியிருக்கிறார்எனக்கு மிக்கமகிழ்ச்சி

கடந்த 16 ஆண்டு காலத்தில் இருமுறை கொண்டுவரப்பட்ட நிலஉச்ச வரம்புச் சட்டத்தின்மூலம் கைப்பற்றப்பட்ட நிலம் 92 ஆயிரம் ஏக்கர்,

இடபோது கொண்டு வரப்பட்டுள்ள இந்த சட்டத்தின் மூலம் 80 ஆயிரம் ஏக்கர் நிலம் கிடைக்கும்.

அதை 40 ஆயிரம் பேருக்கு கொடுக்க இருக்கிறோம். இவைகளுக்கு நட்ட ஈடு நிலவரி அடிப்படையில் என்பதை குறிப்பிட்டிருக்கிறோம்.

நிலத்தை கையேற்றும் போது குத்தகை தாரராக இருந்திருந்தால் நிலத்தை பிரித்து கொடுக்கும் போது அவர்களுக்கு முதல்உரிமை தரப்படும்.

மற்றபடி ஏழைஎளியவர்கள் தாழ்த்தப்பட்ட மக்கள் ஆகியோருக்கு பிரித்து கொடுக்கப்படும்.

நஞ்சை நிலம் 9 ஏக்கர் 96 சென்டுக்கு பழைய சட்டப்படி கொடுக்கப்பட்ட தொகை 66 ஆயிரத்து 867 ரூபாய் 70 காசு.

ஆனல் புதிய சட்டப்படி அந்தநிலத்துக்கு கொடுக்க வேண்டிய தொகை28ஆயிரத்து 618 ரூபாய் ஏறத்தாழ ரூ 40 ஆயிரம்மிச்சம்

புஞ்சை நிலம் 4 ஏக்கர் 12 சென்டுக்குபழையசட்டப்படிகொடுக்கப்பட்ட தொகை 16 ஆயிரத்து 294 ரூபாய் 16 காசு, புதுசட்டபடி 2301 ரூபாய்.

இவ்வாறு அமைச்சர் எஸ். டி, எஸ் கூறினார் பின்னர் மசோதா நிறைவேறியது

## சிம்கோ விவகாரம்: எதிர்க்கட்சிகளுடன் பேச்சுவார்த்தை

### நாஞ்சிலார் தகவல்

**சென்னை, பிப் 23— சிம்கோ மீட்டர் தொழிற்சாலை பிரச்சினை பற்றி எதிர்க்கட்சிகளுடன் இன்று பேச்சுவார்த்தை நடத்தப்படும் என்று நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.**

சட்டசபையின் கேள்வி நேரம் முடிந்ததும், மார்க்சிஸ்ட் தலைவர் சங்கரய்யா எழுந்து சிம்கோ மீட்டர் பிரச்சினையை எழுப்பினர்.

சிம்கோ மீட்டர் பிரச்சினைக்கு தீர்வு காணப்படாததில்எதிர்கட்சிகளுக்கு திருப்தி இல்லை என்றும், பேசித் தீரும் வரை சபை நிகழ்ச்சிகளை ஒத்தி வைக்க வேண்டும் என்றும் சங்கரய்யா கூறினார்.

இதை உமாநாத்தும் வற்புறுத்தினர்

நிதியமைச்சர் நாஞ்சிலார் பதிலளிக்கையில் இது பற்றி டெல்லியிலுள்ள முதல்வருடன் பேசியதாகத் தெரிவித்தார் நிர்வாகத்துடன் முதல்வர் பேச இருக்கிறார் தொழிலாளர் நலத்துறை அமைச்சர் பேச்சுவார்த்தை நடத்திக் கொண்டிருக்கிறார்

இதுபற்றி எதிர்க்கட்சிகளுடன் கலந்துபேசி விவாதிக்கவேண்டும் என்பதில் எங்களுக்குக் கருத்து வேறுபாடில்லை சிம்கோ பிரச்னை பற்றி 26ந்தேதி சபையில் முதல்வா கருத்துதெரிவிக்க இருக்கிறார் என்று நாஞ்சிலார் தெரிவித்தார்.

பிரச்சினையை தீர்ப்பதில் அனைவரும் ஒத்துழைப்பு வழங்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்,

விவாதத்துக்குப் பிறகு 12 மணிக்கு இது மற்றி எதிர்க்கட்சித் தலைவர்களுடன் அரசு ஆலோசனை நடத்தலாம் என்று முடிவு எடுக்கப்பட்டது.

### மீண்டும் பேச்சுவார்த்தை

சென்னை, பிப் 23- சிம்கோ மீட்டர்ஸ் பிரச்சினை பற்றி எதிர்க்கட்சித் தலைவர்களுடன் நிதியமைச்சர் நாஞ்சிலாரும் தொழிலாளர் நல அமைச்சர்ராகவானந்தமும் இன்றும் (வெள்ளி) பகல் பேச்சுவார்த்தைநடத்தினர்

இதில் கருணாநிதி, சங்கரய்யா, உமாநாத், துரை. ராமசாமி அம்பிகாபதி ஆகியோர் கலந்து கொண்டனர்.

## டெல்லியில் பி.டி.எஸ்.

புதுடெல்லி. பிப் 23- சமூக நலத்துறை அமைச்சர் பி டி சரஸ்வதி டெல்லி சென்றுள்ளாா

சென்னையில்மாநிலமகளிர் மாநாடுநடத்துவதுகுறித்து மத்திய கல்வி அமைச்சர் டாக்டர் பி,சி, சந்தருடன் இன்று மாலை 4 மணிக்கு அவர் ஆலோசனை நடத்துவார்,

தென் மாநிலத்தில்உள்ள தாயகம் திரும்பியோரின் பிரச்சினைகள் பற்றி ஆராய நடத்தும் தென் மாநில தாயகம் திரும்பியோர் மறுவாழ்வு மாநாடு குறித்து மாலை 5 மணிக்கு அமைச்சர் பி. டி. எஸ். மத்திய வீட்டுவசதிஅமைச்சர் சிக்கந்தர் பக்த்துடன் ஆலோசனை செய்கிறார்.

## புரட்சித் தலைவர் பங்கேற்கும் மதுரை நிகழ்ச்சிகள்

மதுரை, பிப். 23- முதல்வர் புரட்சித் தலைவர் இம்மாதம் 28ந் தேதி மதுரை வருகிறார்,

திருமங்கலத்தை அடுத்த கள்ளிக்குடியில் நடைபெறும் கால்நடை கண்காட்சியைமுதல்வர் துவக்கி வைக்கிறார் நிகழ்ச்சிக்கு அமைச்சர் பி டி எஸ் தலைமை வகிக்கிறா, அமைச்சர் காளிமுத்து நிகழ்ச்சியில் கலந்து கொள்கிறார் மார்ச் 1ந் தேதி சேடப்பட்டி வெள்ள பகுதிகளை புரட்சித் தலைவர் பார்வையிடுகிறார்

## கல்லூரி ஆசிரியர்களுடன் அரங்கநாயகம் பேச்சு வார்த்தை

சென்னை, பிப், 23- கல்லூரி ஆசிரியர்கள் பிரச்சினைகள்பற்றி இன்று மாலை அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த இருப்பதாக கல்விஅமைச்சர் அரங்கநாயகம் சட்டசபையில் தெரிவித்தார்.

சுமுகமாக பேசித் தீர்க்க வாய்ப்பு உள்ளதாகவும் அவர் குறிப்பிட்டார்.

### டெல்லியில்

## முதல்வர்கள் மாநாடு: புரட்சித்தலைவர் கலந்துகொள்கிறார்

**சென்னை, பிப். 23 முதலமைச்சர்கள் மாநாடு டெல்லியில் நாளையும் ஞாயிறன்றும் நடக்கிறது இதில் கலந்துகொள்ள தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் டெல்லி சென்றுள்ளார்**

இந்தியாமுழுதும் உள்ள முதலமைச்சர்கள் அனைவரும் இந்த மாநாட்டில் கலந்து கொள்வார்கள்

பிரதமர் மொரார்ஜி தேசாய் மாநாட்டுக்குத் தலைமை வகிக்கிறார்

துணை பிரதமர்கள் சரண் சிங், ஜெகஜீவன்ராம் மற்ற மத்திய அமைச்சர்களும் பங்கு கொள்வார்கள்!

மாநாட்டில் கலந்து கொள்ள தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் நேற்று மாலை விமானமூலம் டெல்லிக்குப்புறப்பட்டுச் சென்றார்.

நிதியமைச்சர் நாஞ்சிலார், தலைமைச்செயலாளர் வி, கார்த்திகேயன் நிதித்துறை செயலாளர் கே வெங்கடேசன், ஆகியோர் (இன்று) வெள்ளி மாலை விமானத்தில் டெல்லிக்குப் புறப்பட்டுச் செல்கிறார்கள் அவர்களும் முதலமைச்சர்கள் மாநாட்டில் கலந்து கொள்வார்கள்.

முதல்வர் புரட்சித் தலைவர் டெல்லியில் பிரதமர் தேசாயையும் மற்ற அமைச்சர்களையும்சந்தித்து தமிழக வளர்ச்சித் திட்டங்கள் குறித்து பேச்சுவார்த்தை நடத்துவார்.

## ஜூன் மாதத்தில் உள்ளாட்சி தேர்தல்

சென்னை, பிப்: 23 வருகிற ஜூன் மாதம் இறுதிக்குள் அனைத்து உள்ளாட்சிகளுக்கும் தேர்தல் நடக்கும், இதை முதல்வர் அவர்களின் கருத்தை அறிந்து வெளியிடுகிறேன் என்று அமைச்சர் காளிமுத்து இன்று சட்டசபையில் தெரிவித்தார்.

உள்ளாட்சிகளில் தனி அதிகாரிகளின் பதவிக் காலத்தை நீட்டித்து ஏற்கனவே பிறப்பித்த அவசரச் சட்டத்திற்கு மாற்று சட்டம் இன்று சட்டப் பேரவையில் கொண்டு வரப்பட்டது.

உறுப்பினர்களின் விவாதத்திற்கு பதிலளித்து உள்ளாட்சித்துறைஅமைச்சர் காளிமுத்து கூறியதாவது

சமீபத்தில் ஏற்பட்ட புயல் வெள்ளம் காரணமாக மக்களும் ஊழியர்களும் பெரும் அளவில் பாதிப்புக்குள்ளாகி இருக்கிறார்கள். எனவே தேர்தல் நடத்துவதற்கு இன்னும் சற்று அவகாசம் தேவைப்படுகிறது

முதல்வர் அவர்களின் கருத்தை அறிந்து இதை வெளியிடுகிறேன் ஜூன் இறுதிக்குள் அனைத்து ஊராட்சிகளுக்கும் தேர்தல்நடத்தப்படும் இந்த வாக்குறுதி வெளிவந்த பிறகாவது இது போன்ற சட்டதிருத்தங்களின் விவாதத்தில்கலந்து கொண்டு பேசுகிற உறுப்பினர்களின் கடுமை குறையும் என்று நான் எண்ணுகிறேன்,

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

## விவசாயிகள் பிரச்சினை: முதல்வர் விவாதிப்பார்

சென்னை, பிப் 23- சிறுவிவசாயிகள் பின் தங்கிய விவசாயிகள் ஆகியோரிடம் பங்குத் தொகை வசூலிப்பதை குறைப்பதற்கு அரசு முன் வருமா என்று சட்ட மன்றத்தில் இன்று கேள்வி எழுப்பப்பட்டது

இதற்கு கூட்டுறவு அமைச்சர் கே ஏ கே பதில் அளிக்கையில் கூறியதாவது;

விவசாயிகள் தொடர்பான அனைத்துப் பிரச்சினைகள் பற்றியும் டெல்லியில்நடக்கும்தேசிய வளர்ச்சிக்குழு கூட்டத்தில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் எடுத்து வைக்க இருக்கிறார் பல் வேறு மாநில முதல்வர்களும் இந்தப் பிரச்சினை பற்றிப் பேச இருக்கிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ, கே, பதில் அளித்தார்

### கோவை மருத்துவமனை ஸ்டிரைக்:

# களங்கம் கற்பிப்போர்மீது நடவடிக்கை

**சென்னை, பிப். 23— கோவை மருத்துவக்கல்லூரி மருத்துவமனை அதிகாரியோடு தொலைபேசியில் தொடர்பு கொண்டு தாம் தரக்குறைவாகப் பேசியதாக வெளிவந்த செய்தியை கிணத்துக்கடவு தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் கந்தசாமி மறுத்துள்ளார்,**

இப்படிப்பட்டசெய்தி பொய்யானது. அவதூறானது. விஷமத்தனமானது, உள் நோக்கம கொண்டது, என்றும் அவர் கூறியுள்ளார்,

கந்தசாமிவெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

கோவை மருத்துவக் கல்லூரி டீனிடம் நான் தரக்குறைவாக பேசியதாகவும் அதனல் கோவை மருத்துவ கல்லூரி மருத்துவமனையில் வேலை நிறுத்தம் நடைபெறுவதாகவும் வந்த செய்தி அறிந்து அதிர்ச்சி அடைந்தேன்.

21-2-79 அன்று நான் யாரிடமும் தொலை பேசி மூலம் சென்னையிலிருந்தோ மற்ற இடங்களிலிருந்தோ கோவைக்கு தொடர்பு கொள்ள வில்லை

இதுவரைஎந்த சிபாரிசுக்காகவும்கோவை மருத்துவமனைக்கோ மருத்துவக் கல்லூரிக்கோ நான் சென்றது இல்லை இந்த நிலையில் நேற்றைய மாலை பத்திரிக்கைகளில் என்னை சம்பந்தப்படுத்தி செய்திகள் வெளியாகியுள்ளன.

கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவமனை வேலை நிறுத்தத்தில் என்னைச் சம்மந்தப் படுத்தி செய்திகள் வெளியாகியிருப்பது கண்டு வேதனையும் அதிர்ச்சியும் அடைந்தேன்.

நேற்று மாலைப் பத்திரிகைகள் மூலம் என்னைப் பற்றி நடக்கும் உள் நோக்கம் கொண்ட அவதூறு விஷமப் பிரச்சாரத்தை அறிந்துநான் உடனடியாக ஒரு மறுப்பு அறிக்கையை நேற்றே வெளியிட்டேன், அந்த அறிக்கை "தினத்தந்தி," கோவைப் பதிப்பில் இன்று வெளியாகி உள்ளது,

கோவை மருத்துவக் கல்லூரி முதல்வரையோடாக் டர்களையோ தொலைபேசி மூலமோ நேரிலோ நான் திட்டவில்லை என்பதையும் தரக்குறைவாகப் பேசவில்லை என்பதையும் அந்த அறிக்கையில் நான்தெளிவுபடுத்தி இருக்கிறேன்

எதிர்க்கட்சியை சேர்ந்த

### கழக எம்.எல்.ஏ அறிவிப்பு

(4-ம் பக்கம்பார்க்க)

## சிம்கோ பேச்சு வார்த்தை

சென்னை, பிப். 23- திருச்சி சிம்கோமீட்டர் பிரச்னை பற்றி நிர்வாகத்துடன் தொழிலாளர் நலஅமைச்சர் ராகவானந்தம் நாளை பேச்சுவார்த்தை நடத்துவார் என்று சட்டசபையில் நிதி அமைச்சர் நாஞ்சிலார் தெரிவித்தார்

தாக்குதல் அதிகமானால் தாங்கிக் கொள்வேனே தவிர கீழே தள்ள மாட்டேன்....

# நல்விளைவு ஏற்படும் என்றால் உயிரைத் தரவும் தயங்க மாட்டேன்

## மேலவையில் முதல்வர் புரட்சித்தலைவர் உரை

சென்னை, பிப். 23- ஆளுநர் உரை மீதான விவாதத்திற்கு பதிலளித்து மேலவையில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் ஆற்றிய உரையின் நேற்றைய தொடர்ச்சி வருமாறு:-

வெள்ள நிவாரணத்திற்காக சென்னையில் பாதிக்கப்பட்டவர்களுக்கு 50 கிலோ அரிசியும் சேலையும் முதலில வேட்டியும் பிறகு லுங்கியும்கொடுத்ததையாரோ சிபாரிசு செய்தவர்களுக்குத்தான் கொடுக்கப்பட்டது என்று இங்கே குறிப்பிட்டார்கள் என்று அறிகிறேன். அதைப் பற்றி கடிதங்களைக் கூட காட்டியதாகத் தெரிகிறது.

ஆற்காடு வீராசாமி: கடிதம் காட்டவில்லை. குறிப்பிட்டேன்.

முதல்வர்: (தொடர்ந்து) நாங்கள் சேலையும் வேட்டியும், லுங்கியும் கொடுத்தபோது யாரையும் தேடிப்பார்த்துக் கொடுக்கவில்லை, நிச்சயமாக என்னால் அதைச் சொல்ல முடியும் யார் யார் அதை வாங்கினார்கள் என்பதற்கெல்லாம் என்னிடம் விவரம் இருக்கிறது ஏதோ நாங்கள் எங்கள் கட்சிக்காரர்களுக்கு மட்டும் கொடுத்துவிட்டோம் என்ற அளவில் குற்றச்சாட்டுகள் எல்லாம் சில இடங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இங்கே அப்படி சொன்னார்களோ என்னவோ எனக்கு தெரியாது.

ஆற்காடு வீராசாமி: சொல்லியிருக்கிறோம்,

முதல்வா (தொடர்ந்து): சொல்லியிருக்கிறோம் என்று குறிப்பிடுகிறார்கள். உறுப்பினர்கள் கொஞ்சம் பொறுமைகாட்டவேண்டும் (முதல்வர் புரட்சித்தலைவர் சில கடிதங்களைக் கொண்ட தொகுப்பைக் கையில் எடுத்துக் கொள்கிறார்)

### தி.மு.க.வினர் கொடுத்த பட்டியல்

இவைகள் அனைத்தையும் இங்கே நான் படிக்க விரும்பவில்லை, இவைகள் எல்லாம் அனைத்திந்திய அண்ணா திமுக-வின் அமைப்பாளர்களால் அல்லது செயலாளர்களால் எழுதப்பட்டவையல்ல, இவைகள் அனைத்தும் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்ட கடிதங்கள், அவைகளில் ஒரு சிலவற்றை மட்டும் நான் இங்கே படித்துக் காட்டலாம் என்று நம்புகிறேன்.

இது கலைஞர் நற்பணிமன்றம் தந்த பட்டியல், அவர்கள் சொன்ன அத்தனைபேருக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது, அந்த லிஸ்ட் தான் இது.

அடுத்தது திமுக ராமநாய்க்கன் தோட்டம் அவர்கள் கொடுத்தது, இவைகளையெல்லாம் நான் இங்கே குறிப்பிடுகிறேன் என்றால் நாங்கள் அதிகாரிகளிடத்தில்...

ஆற்காடு வீராசாமி:- எதிர்க்கட்சித் தரப்பிலிருந்து இப்படிப்பட்ட முறையீடுகள் அதிகாரிகளுக்கு வந்தபிறகு நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது முதலமைச்சர் இங்கே அவரிடம் உள்ள பட்டியலைக் கொடுக்கும்போதே ஆளும் கட்சியினர் கொடுத்த பட்டியலையும் கொடுத்திருந்தால் நன்றாக இருக்கும். அதை வைக்காமல் ஒரு கட்சிக்காரர்களை மட்டும் இப்படிக் குறிப்பிட்டுப் பேசுவது முறையல்ல

### வேறுபாடாக நடந்துகொள்ளவில்லை

முதல்வா: (தொடர்ந்து) குற்றம் சாட்டப்பட்ட நிலையில் உள்ள ஒருவன் தான் நிரபராதி என்பதற்குரிய அடையாளத்தை, ஆதாரத்தைக் காட்டுவானே தவிர இன்னொருவர் குற்றவாளி என்று சொல்லுவதற்கு பட்டியல் காட்டமாட்டான். ஆகவே அப்படிப் பட்டியலைக் காட்ட வேண்டியது அவசியமில்லை என்றுதான் நான் கருதுகிறேன், நாங்கள் யாருக்கும் விபரீதமாக வேறுபாடாக நடந்து கொள்ளவில்லை என்பதையும் இந்தபட்டியலில் உள்ளவர்களுக்கு எந்தெந்தத் தேதியில் நிவாரணங்கள் வழங்கப்பட்டன என்பதையும் இந்த அவையிலேயே விவரமாக வைப்பதற்குக் கூட தயாராக இருக்கிறேன். எழுத்துக்களை மாற்ற முடியாது. அதையாவது உறுப்பினா நம்புவார் என்று எதிர்பார்க்கிறேன்.

இப்போதும் ஒரு 250 குடும்பத்திற்கு நிவாரணம் வழங்கப்படவில்லை என்று குறிப்பிட்டார்கள். நான் திரும்பத் திரும்ப ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். கட்சிக்காரர்களுக்கு மட்டும் என்று பார்த்துக் கொடுப்பது ஒருவேளை இந்தப் பணியில் கட்சிக்காரர்கள் ஈடுபட்டிருந்தால் முடிந்திருக்கும். ஆனால் அதிகாரிகள் ஆட்சிக் கட்சிக்காரர்கள் சொல்லுகிறார்கள் என்பதற்காக அவர்களுக்கெல்லாம் கொடுக்காமல் விட்டுவிட்டார்கள் என்று சொல்லுவது பொருத்தமாக இருக்காது. படங்களையெல்லாம் கூட நான் இங்கே கொண்டு வந்திருக்கிறேன். ஆனால் அவைகளை இங்கே காட்டுவது முறையா என்பதால் காட்டாமல் வைத்திருக்கிறேன் உறுப்பினா அவர்களுக்கு மட்டும் காட்டுவது முறையாகாது.

வாய்ப்பு கிடைக்கும்போது பத்திரிகைகளில் எங்கெங்கே வெளியிட வேண்டுமோ அவைகளை ஆங்காங்கே நிச்சயமாக வெளியிடுகிறேன் என்ற பொறுப்பை ஏற்கிறேன்.

### எச்சரிக்கையுடன் பணிபுரிந்தோம்

மீண்டும் ஒன்றைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எத்தனை இடங்களிலிருந்து ஏழைகள் என்ற நிலையில் வெளியேற்றப்பட்டு குடிசைகளிலிருந்து வெளியேற்றப்பட்டு கார்ப்பரேஷன் அதிகாரிகளுடைய பாதுகாப்பில் இருந்தார்கள் என்ற கணக்கையும் தயவு செய்து இதைப்போன்ற குறிப்புகளைப் பெறுகிறவர்கள் பெற்றாக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன் அரசாங்கத்தைப் பொறுத்தவரை எவ்வகைக்கட்டளையிடப்பட்டது என்றால் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட, இடமின்றி. மாற்றுத் துணியின்றி, திரும்பிப் போகும்போது எங்கேயோ வேலை செய்வது. எங்கே வேலை கிடைக்கும் என்றநிலைகூடத் தெரியாது இருக்கிற ஏழைகள் எங்கெங்கே வந்து அடைக்கலம் புகுந்தார்களோ அவர்களுடைய பட்டியலைப் பார்த்து அவர்களுக்கு நிவாரணம் வழங்கவேண்டும் என்று சொல்லப்பட்டது அதைக்கூட எந்த அளவுக்கு எச்சரிக்கையாகச் செய்தோம் என்றால் அங்கே வந்தவர்களுக்கு எல்லாம் சீட்டு கொடுத்து அவர்களையெல்லாம் அந்தந்த அரிசிமூட்டைகளின் மேலேயே உட்காரவைத்து அவர்கள்தான் மூட்டையை எடுத்துச் செல்லவேண்டும் இல்லாவிட்டால் குழப்பம் வந்துவிடும் என்று சொன்னோம். காரணம் நிலைமை அப்படி இருந்தது.

துவக்கத்தில் அதிகாரிகள் பாதுகாப்புக்காக தங்கி இருந்த இடங்களில் இருந்தவர்களைக் கணக்கெடுத்துப் பார்த்தபோது சில ஆயிரம் பேர்கள் தான் என்ற நிலை இருந்தது பின்னால் போகப்போக மக்கள் மக்கள் வருகை அதிகமாகி விட்டது உணவை தேடி வந்தவர்கள் மட்டுமல்ல எங்கெங்கோ போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம்கூட உணவுக்காக வந்துவிட்ட நிலைமையை பார்த்தோம். ஒரு இடத்தில் நானே பார்த்தேன்.

காந்தி மண்டபத்திற்குச் சென்றபோது பட்டியலை எடுக்க சொன்னார்கள். இரண்டு மூன்று பெரிய பாத்திரங்களில் உணவு கொண்டு போன போது போதவில்லை என்று சொன்னார்கள். பட்டியல் எடுக்கும் போது அவ்வளவுக்கு அங்கே ஆள் இல்லை, சாப்பிடும் போது வருகிறார்கள் என்றால் வெளியே வேலை கிடைக்காதவர்களோ என்னவோ தெரியாது அவர்கள் அங்கே உணவு அருந்த சென்றிருக்கிறார்கள்.

அவர்களை நான் குறை கூறவில்லை. இந்த சமுதாயம் அப்படி ஆக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலை இருப்பதால் அதை அவர்கள் உண்டுவிட்டு செல்கிறார்கள். என்றாலும் அவர்களுக்கு அடைக்கலம் தருகிற பொறுப்பில்லையென்றாலும், அரசைப் பொறுத்த வரையில் வேறு வகையின்றி, குழந்தையோடு தங்கியிருக்கின்றவர்கள் கணவன் இருந்தும் கணவரோடுஇருந்து வாழ்க்கையை அனுபவிக்க முடியாதவர்கள்-அல்லது கணவன் இல்லாமல், வேலைசெய்ய முடியாமல் இருக்கிற நிலையைப் பார்க்கும்போது அவர்களுக்கும் துணி, வேட்டி, லுங்கி ஆகியவைகள் கொடுக்கவேண்டும், அதுவும்கைத்தறித் துணியாக இருக்க வேண்டுமென்ற நிலையில் நாங்கள் அந்தப் பணியை மேற்கொண்டோம.

எண்ணியது வேறு, ஆனால் கொடுத்தது எவ்வளவு என்றால் மயிலாப்பூர் பகுதிக்கு அரிசி 21.733 பேருக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இதிலே பெரும்பான்மையானவர்கள் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினர் என்றால் எப்போதோ நாங்கள் எத்தனையோ எம் எல் ஏ க்களைப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் அத்தனை எம், எல் ஏ க்களைப் போன தேர்தலில் பெற முடியவில்லை. அப்படிப்பட்ட நிலையில் தண்டையார்பேட்டையில் 36,520 கிலோவும், எழும்பூர் - நுங்கம்பாக்கம் 32,990ம் பெரம்பூர்- புரசைவாக்கம் 27,029ம் மாம்பலம் - கிண்டிக்கு 31,834 என்றும் பிரித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதேபோலவே மான்யமாக 100 ரூபாய் என்று கொடுக்கப்பட்டது, அதுவும் ஒவ்வொரு இடமாகச் சொல்லவேண்டுமென்றால், 16,100 ரூபாய், 24,400 ரூபாய், 2,76,000 ரூபாய், 5.89,000 ரூபாய் என்றும் 6,45,500 ரூபாய் என்றும் நிதியுதவி அளிக்கப்பட்டிருக்கிறது, துணியும், வேட்டியும், புடவையும் கொடுத்தவகையில் 21,732பேர். அதிலே குழந்தைகள் வாங்கிக் கொள்ளாததால் 21,681பேருக்குத் துணிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை யெல்லாம் இங்கேகுறிப்பிடும்போது எனக்கு ஏற்பட்ட ஒரு அனுபவத்தை நான் சொல்லியாக வேண்டும்.

1942ஆம் வருடம் என்று எனக்கு ஞாபகம் ஒரு வேளை தவறாக இருக்கலாம், "எம்டன்" குண்டு போட்ட நேரம். அன்று நான் சென்னையிலே இருந்தேன். சென்னையிலே இருந்தபோது அதற்கு முதல் நாள் வெள்ளம் வந்தது அந்த வெள்ளம் இப்போது ஏற்பட்டிருக்கிறதைப் போன்ற வெள்ளம் அல்ல இருக்கிற ஏரிகள் எல்லாம் உடைந்து சென்னை நகரமே வெள்ளமாக இருந்தது.

மேலவைத்தலைவர்: எம்டன் குண்டு போட்டது முதல் யுத்தம் என்று நினைக்கிறேன்.

முதல்வர் (தொடர்ந்து): எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அன்றைக்கு ஏ ஆர் பிகூட வேலை செய்யவில்லை அந்த நிலையில் வெள்ளம் வந்த சூழ்நிலையை எண்ணிப் பார்க்கும்போது அதனுடைய அபாயத்தை எல்லாம் உணர முடியும், அப்போது நாங்கள் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ் ரோடும், வால்டாக்ஸ் ரோடும் சந்திக்கிற திருப்பத்திலுள்ள ஒரு வீட்டில்தான் குடியிருந்தோம் அங்கு குடியிருந்த நேரத்தில் சென்னையிலே ஆபத்து உருவாயிற்று. ஒரே நாளில் இருக்கிற ஏரிகள் எல்லாம் உடைந்துவிட்டன. ஒரே நாளில் ஐந்து அடி ஏழு அடி தண்ணீர் உள்ளே சென்றது, அணை உடைந்து எப்படி தண்ணீர் வருமோ அதே போல, தண்ணீர் வந்தது. அப்படிப்பட்ட அபாயத்தை நானே நேரில் கண்டேன் என்ற வகையில் இப்போது மழை பெய்கிறது என்ற உடனே, அணைக்கட்டுகளை உடனடியாகக் கவனிக்கத் துவங்கினேன்.

அணைக்கட்டுகளுக்கு ஆபத்து வந்துவிடக் கூடாது என்பதற்காக, அந்த அணைக்கட்டுகளுடைய தேக்க அளவு எவ்வளவு? இன்னும் எத்தனை அடியிருக்கிறது என்று கேட்கிற வகையிலே இரவு பகலாகச் சுற்றிக் கொண்டிருந்தேன். அதற்குப்பிறகு பாதிக்கப்பட்ட மக்களைச் சந்திக்கச் சென்றேன். அப்படிச் சந்திக்கச் செல்லும் போது முழங்கால், தொடை அளவுக்குத் தண்ணீர் தேங்கி நின்ற அளவில் குடிசைகள் இருந்தன. குடிசைகள் பாதி தண்ணீரில் இருந்தன, அண்ணா அவர்கள் எரியாத வீடுகளைக் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கட்டிக்கொடுத்த வீடுகள் தண்ணீரில் மிதந்து கொண்டிருந்தன, நரகலும், உணவும் ஒருமித்தக் கலப்பாகக் கலந்து விட்டன.

இதைவிட ஆபத்து 1942ஆம் ஆண்டில் ஏற்பட்டது. கூவம் நதியில் தண்ணீர் பெருக்கெடுத்தது. வெள்ளம் ஏற்பட்டால் எப்படி 3 அடி, 4 அடி வெள்ளம் வருமோ அதேபோல கூவம் நதியில் வெள்ளம்வந்தது. அந்தவெள்ளம் அதிகமாக வந்தால் நதியிலே வந்தபிறகு கடலிலே கலக்க வேண்டும். நதியிலே தண்ணீர் அதிகமான காரணத்தால், சாக்கடையில் போகவேண்டிய கழிவுப்பொருள்கள், கழிவுநீர், குடிநீர் குழாய்கள் எல்லாம் உடைப்பட்டதன் காரணமாக, அதிலேகலந்து, நதியிலே விழவேண்டிய தண்ணீர் நதியிலே போகமுடியாமல் குழாய்கள் மூடிவிட்டதால் வீட்டுக்குள்ளேயே தேங்க ஆரம்பித்து வீட்டுக்குள் தண்ணீர் புக ஆரம்பித்தது. மேலே பார்த்தால் தண்ணீர் இருக்கும் அடிப்பாகத்திலே இருந்து வீட்டுக்குள் தண்ணீர் வரும். இது எவ்வளவு மோசமாக இருந்திருக்கும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

இவைகளையெல்லாம் அனுபவித்தவன் என்றவகையில், அந்தத் தொல்லைகள் மக்களுக்கு ஏற்படக் கூடாது என்று பல இடங்களில் சுற்றிப்பார்த்தேன். நாங்கள் செலவிட்ட எண்ணிக்கையையும் அவலநிலைக்கு ஆளாகி கார்ப்பரேஷன் அதிகாரிகளுடைய பாதுகாப்பிலிருந்தவர்களுடைய எண்ணிக்கையும், இந்த அரிசியையும் துணிகளையும், நிதியையும் வாங்கியவர்களுடைய எண்ணிக்கையின் கணக்கையும் ஒத்திட்டு பார்த்தால் இரண்டும் ஒன்றுசேராது. நிச்சயமாக ஒன்றுக்கு பத்து மடங்கு அளவுக்கு வாங்க முயற்சித்தார்கள்.

நாங்கள் எடுத்துக்கொண்ட முயற்சி, எங்களுடைய நோக்கம் ஆகியவை நல்லதாக இருந்தும், அதில் ஏதாவது தப்பான வழியில், வெறுப்பு ஏற்படச் செய்யலாம் என்று எண்ணினார்களோ அல்லது உண்மையிலே தேவைப்பட்டதோ என்னவோ தெரியாது. ஒரு மாதம், ஒன்றரை மாதம் கழித்து எங்களுக்கும் அரிசி தேவை, துணி தேவை என்று கேட்டார்கள் இன்றைக்குச் சொன்னோம் அந்தப் பட்டியலை நிறுத்திவிட்டோம், கொடுக்க வேண்டிய பட்டியலில் உள்ளவர்களுக்குக் கொடுத்துவிட்டோம், ஆகவே இல்லை என்று சொன்னோம்,



உண்மையிலேயே வீடு இடிக்கப்பட்டது என்பதை நாங்கள் நிருபித்து காட்ட முடியும் இடித்துவிட்டு, நிதி கொடுங்கள் புதிதாகக் கட்ட வேண்டும் என்று கேட்டவர்கள் இருக்கிறார்கள், அப்படிப்பட்ட யோசனை தோன்றியது ஏனோ தெரியவில்லை. என்றாலும், அரிசி பணம், புடவை கொடுத்ததால் நல்ல உள்ளம் இருக்கிறது என்று பாராட்டினார்கள், ஒத்துக் கொள்கிறேன்.

உறுப்பினா அப்துல் வகாப் இது மட்டமான அறிக்கை, எனது வாழ்க்கையிலே பார்த்த அறிக்கைகளில் இதுதான் மோசமான அறிக்கை என்று சொன்னார்கள் அதை நான் புரிந்து கொண்டேன் அவர் அப்படி சொல்லும்போது, எம் ஜி ஆர் மீது நல்லெண்ணம் எனக்கு இருக்கிறது. அவர் எனக்கு நேற்று நண்பர். இன்றும் நண்பர் நாளையும் நண்பராக இருப்பார்' என்றும் கூறினார் அவருக்கு எங்களுடைய நோக்கத்திலே சந்தேகம் இல்லை என்பதற்கு உத்திரவாதமாக அமைந்திருக்கிறது அவருடைய பேச்சு எங்களுடைய நோக்கத்திலே களங்கம் இல்லை எண்ணத்திலே தவறான முறையில்லை என்பதை நம்புகிறார்கள் எங்களைப் பாராட்டா விட்டாலும் குறை கூறாமல் இருந்தால் பரவாயில்லை என்று நான் சொல்லவில்லை. குறை கூறுங்கள். குற்றச்சாட்டுக்களைக் கூறுகிற நேரத்தில் சில தவறான செய்திகள் கூட இருக்கக் கூடும். உண்மையிலேயே அப்படியிருக்குமானால் நிருபித்து, கார்ப்பரேஷன் அதிகாரிகளுடைய பாதிக்கப்பட்டோர் பட்டியலில் இருந்தார்கள் என்று நிருபித்தால் அவர்களுக்கு நிச்சயமாகக் கொடுக்க ஏற்பாட்டைச் செய்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறோம்.

இந்த அறிக்கையிலே என்ன திட்டம் இருக்கிறது என்று கேட்டிருக்கிறார்கள். திட்டத்தை மேலெழுந்தவாரியாகத்தான் சொல்லுவது வழக்கமே தவிர, திட்டத்தை புள்ளிவிவரத்தோடு தெரிவிப்பது வழக்கமில்லையென்று கருதுகிறேன். நான் புதிதாக அரசுப் பொறுப்பை ஏற்று ஒன்றரை ஆண்டுகாலந்தான் ஆகிறது. பதினைந்து ஆண்டுகாலமாக இருக்கிற உறுப்பினர் வகாப் அவர்களுக்கு நியாயமில்லை என்று தோன்றினால் நான் அதை சிந்தித்தாக வேண்டும், அதைக் கவனித்தாக வேண்டும். அதிலே என்ன இல்லை என்று கேட்கிற தொனிக்கு நான் வரவில்லை, என்னென்ன திட்டங்கள் இல்லையென்று சொன்னா என்று கவனித்துப் பார்த்தேன். "இதையெல்லாம் இல்லையென்று சொல்கிறோம், இப்படியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்" என்று அவர் சொல்லியிருந்தால், தொடர்ந்து பட்ஜெட்டை வெளியிடும் போது, ஏற்கனவே தயாரித்திருந்தாலும அதிலே குறைகள் இருந்தாலும்கூட இதை நிறைவு செய்ய நாங்கள் முயற்சி செய்யலாம்.

குறைகள் கூறும்போது, நைலான் வலை பின்னுகிற தொழிற்சாலையை அமைக்க ஏதோ நாங்கள் அனுமதியைக் கொடுத்து விட்டது போலவும், ஆதலால் மீனவர்களுடைய வாழ்க்கையே பாழாகி விட்டது போலவும் பேசியிருக்கிறார்கள். அப்படிப்பட்டக் கருத்துக்களை வெளியிட்டிருந்தால், அவருக்குச் சொல்லிக்கொள்ளுவேன், இன்னும் தொழிற்சாலைக்கு அனுமதி வழங்கவில்லை. அப்படி வழங்கப்போவதும் இல்லை என்று இங்கே தெரிவித்துக்கொள்கிறேன்'

இன்னொன்றைக் குறிப்பிட வேண்டும். காகித ஆலை எங்கே என்று கேட்கிறார்கள். யாராவது கேட்டிருந்தால் அதுபற்றி ஆச்சரியப்பட மாட்டேன். நானே வெளியிலே இருந்து, அதைக் கேட்டிருந்தால் அதில் ஆச்சரியமில்லை. ஆனால் தெரிந்தவர்கள், 7 ஆண்டுகளாக ஆட்சியில் தொடர்பு வைத்திருந்தவர்கள், அதிலே நன்றாக ஊறித் திளைத்தவர்கள், அதைப் பற்றி புரிந்தவர்கள், எது நல்லது, கெட்டது என்று சொல்லக் கூடிய ஆற்றல் பெற்றவர்கள்-அவர்கள் கேட்கிறார்கள். எப்படி அதை அலட்சியப் படுத்த முடியும்? சிந்தித்துப் பார்த்தேன். நான் இதை எப்போது சொன்னேன்? இப்படி ஒருதிட்டம் இருக்கிறது கரும்புசக்கையிலிருந்து காகிதம் உற்பத்தி செய்கின்ற ஒரு திட்டம் தரப்பட்டிருக்கிறது, அதை நான் அமெரிக்க பயணத்தின் போது தெரிந்து கொள்ள விரும்பினேன் என்றுசொல்லி அதை பார்க்க மெக்சிகோ நகருக்கு சென்றேன். அங்கே சென்று பார்த்த பிறகு அவர்களுடன் பேசிவிட்டு, ஒன்றைச் சொல்லி விட்டு வந்தேன். நீங்கள் காகிதத்தை உற்பத்தி செய்து, எங்களுக்கு அனுப்புங்கள். அதைப் பார்க்கிறோம். அதற்குப் பிறகு உங்களுடன் தொடர்பு கொண்டு, கருவிகள் பெற ஒப்பந்தம் செய்து கொள்கிறோம். உங்களுடைய நுணுக்கத் திறமையைப் பெறவழி வகைகள் செய்கிறோம். அப்போது முடிவு செய்து கொள்ளலாம் என்று சொல்லி விட்டு வந்தேன்,

எப்போது நான் அமெரிக்கா சென்றேன்? அது இங்கேயுள்ள உறுப்பினர்களுக்குத் தெரியும். என்று மெக்சிகோ சென்றேன்- அதுவும் தெரியும். ஒரு காகித ஆலைக்கு ஏறத்தாழ 130 கோடி அல்லது 135 கோடி ரூபாய் செலவு செய்து தொடங்கவேண்டும் ஓராண்டுக்கு அதிலிருந்து 250 அல்லது 350 டன்கள் உற்பத்தி செய்யக்கூடிய காகித ஆலையைத் தோற்றுவிப்பது என்பது ஒருநாளில் நடக்கிற காரியமா? திட்டம்போடாமல் புகழுக்காக இவ்வளவு ரூபாய் செலவு செய்துவிட்டோம் அதைத் தொடங்கி விட்டோம் என்று கல்நாட்டுவிழா செய்துவிட்டால் போதுமா? பெயர் இருந்தால் போதும் என்று நினைத்திருந்தால் அதை நடத்தியிருக்கலாம் எங்கேயாவது ஒரு இடத்தைப் பார்த்து எம்.ஜி.ஆர் திறந்து வைத்தார் இதுதான் காகித ஆலை" என்று சொல்லி விட்டு 3 ஆண்டுகளுக்குப் பிறகு துவங்கலாம். யாரும் அதைப் பற்றி கவலைப்படப் போவதில்லை.

கூடுமானவரையில் ஓர் ஆலை துவங்கப்பட வேண்டுமென்றால் அதை முழுமையாக சிந்தித்துப் பார்க்க வேண்டும் அரசு பணத்தை செலவழிக்கும் போது எச்சரிக்கையோடு நிபுணர்களின் யோசனையை கேட்டுச் செய்ய வேண்டும். மேலும் அது நடைமுறைக்கு நம் நாட்டிற்குப் பொருந்துமா, எந்த அளவுக்குப் பொருந்தும் என்பதையெல்லாம் எண்ணிப்பார்க்க வேண்டும். அது பொருந்தும் என்றால் அதற்கு மத்திய அரசின் உத்தரவு எப்போது வரும் என்பதையும் பார்க்கவேண்டும். மத்திய அரசின் அது குறித்த உத்தரவு கிடைத்து இருக்கிறது, அவர்கள் பரிசீலனை செய்யத் தயாராக இருக்கிறார்கள் என்பதைக் கேட்டு எல்லோரும் மகிழ்வார்கள்.

எனவே காகித ஆலை அந்த நிலைமைக்கு அடி எடுத்து வைத்திருக்கிறது என்பதைச் சொல்லும்போது. அதில் ஒரு சந்தேகம் வருகிறது. இவ்வளவு கோடிக்கணக்கான பணத்தைச் செலவு செய்யும்போது ஒரு தனி நபரிடம் ஒப்படைத்து விடுகிறதா என்றசந்தேகத்தைக் கிளப்பியிருக்கிறார்கள். அவ்வளவு பெரிய தவறை நாங்கள் செய்வோமென்று எவ்வளவு தான் தெரியாதவர்களாக இருந்தாலும், மற்றவர்கள் சொன்னதை எப்படி அவர்கள் நம்பினார்கள் என்பதை புரிந்துகொள்ள முடியவில்லை.

ஒன்றைச் சொல்கிறேன். தனியார் துறை அல்ல. அரசுத் துறையில் தான் காகிதஆலை அமையும். அரசுத் துறையில் தான் அந்த ஆலை உருவாகப் போகிறது. அதற்கு அனுபவப்பட்ட ஒருவர் இருவரைப் பயன்படுத்தினாலும், அரசாங்க அதிகாரிகள்- நிதித்துறை செயலாளர், தொழில் துறைச் செயலாளர் ஆகியோர் அதில் உறுப்பினர்களாக இருப்பார்கள் அவர்கள்தான் அதை நடத்துவார்கள் என்பதையும் இங்கே சொல்கிறேன். அதற்குரிய திட்டங்கள் தீட்டப்பட்டு வருகின்றன, அந்த அளவில் நாங்கள் செய்கின்ற காரியங்கள் தாமதமாகின்றன என்று சொன்னால் அதை ஒத்துக்கொள்கிறேன். நான் கணக்கு சொல்லாததால், சொன்னால் அதுவும் தாமதமல்ல சரியாகத்தான் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வீர்கள் என்பதை நம்புகிறேன்.

லட்சம் பேருக்கு வேலை கொடுப்பதாக போன ஆண்டு ஆளுநர் அவர்கள் உரையில் சொல்லப்பட்டது அனைத்திந்திய அண்ணா திராவிடமுன்னேற்றக் கழக அரசுதான் அதைத் தயாரித்துக் கொடுத்தது. செய்தார்களா என்று கேட்டார்கள். சட்டப்பேரவையிலேயே சொன்னேன், மீண்டும் சொல்கிறேன். 1 லட்சத்து 30 ஆயிரம் பேர்களுக்கு வேலைதரப்பட்டிருக்கிறது. 5 ஆயிரத்திற்கும் மேற்பட்ட சிறு தொழில்கள் துவக்கப்பட்டிருக்கின்றன. பலதுறைகளில் பணியாற்றுகிறார்கள். இன்னும் சொல்லப்போனால், நான் அவற்றைக் கணக்கில் சேர்க்கவில்லை. வெள்ளம் வந்தபிறகு சாலைகளிலே வேலைசெய்கிறவர்கள் எத்தனைபேர் என்பதைக் கணக்கிட்டுப் பார்க்க வேண்டும்,

இப்போது எதிர்க்கட்சித் தலைவர் கூட இத்தனை குளங்கள் உடைந்துவிட்டன என்று சொன்னார். அதைப் பழுது பார்க்கின்றவர்கள் இப்போது வேலைகளில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். பணமெல்லாம் செலவழிக்கப்படுகிறது. அப்படி உழைப்பவர்களுக்குப் போய் அந்தப் பணம் சேருகிறதே தவிர தனி மனிதருக்கோ அல்லது இடைத்தரகருக்கோ அது போய்ச்சேரவில்லை. அதில் இந்த அரசு எச்சரிக்கையோடு இருக்கிறது என்பதைச் சொல்லிக்கொள்கிறன். அவ்வப்போது தாசில்தார்கள் மற்றஅதிகாரிகள் தவறுசெய்பவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள். அவர்கள் மீது வழக்குகள் போடப்படுகின்றன என்பதை நீங்கள் பத்திரிகையில் பார்க்கும்போது, அதைப் புரிந்து கொள்ள முடியும்.

எதிர்காலத்தில் பட்ஜெட் வரும்போது சில கொள்கைகளைத் திட்டங்களாக அறிவிக்க இருக்கிறோம். அதுவரையில் எதையும் வெளியிட முடியாத காரணத்தால் சில குற்றச் சாட்டுக்களை 10, 15 நாட்களுக்குச் சுமந்து கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். எத்தனையோ குற்றசாட்டுக்களைச் சுமந்து கொண்டிருக்கும்போது இதை சுமந்துகொள்வது கஷ்டமல்ல.

ஒட்டகத்தின் மேலே உள்ள பொருள்களில் சில பொருள்களை எடுத்துவிட்டு, ஒட்டகத்தை ஓட்டுவதைப் போல ஒருவேளை பட்ஜெட் வந்தபிறகு என்னைப் பாராட்டுவது போல் பாராட்டி, கொஞ்சம் இறக்கி வைத்து இன்னும் கொஞ்சம் தாக்குதல் அதிகமானால் அதையும் தாங்கிக்கொண்டு பாலைவனத்தில் நடந்து செல்வதுதான் என்னுடையகடமை என்பது போல் அந்த ஒட்டகத்தின வேலையைச் செய்வேனே தவிர நான் கீழே தள்ளமாட்டேன. குதிரைக்குத் தான் அந்தப் பழக்கம் குதிரை கீழே தள்ளுவது மாத்திரமல்லாமல் குழியையும் பறிக்கும் என்பார்கள். இந்த ஒட்டகம் அப்படியல்ல. ஒன்றும் தெரியாமல் சுமந்து கொண்டே போகும். சில சமயங்களில் தண்ணீர இல்லாமல் தவிக்கும் சொந்தக்காரர்கள், ஒட்டகத்தின் இரைப்பையை அறுத்து, அங்கே தேக்கி வைக்கப்பட்டுள்ள தண்ணீரைப் பயன்படுத்திக்கொள்ளலாம். அப்படி என்னுடைய உழைப்பும், என்னுடைய நல்லெண்ணமும், உயிரையும்கூட பயனபடுத்திக்கொண்டு, அதனால் நல் விளைவு ஏற்படுமென்றால், அதற்காக அச்சப்படமாட்டேன், மகிழ்ச்சிதான் கொள்வேன் என்பதைச் சொல்லிக்கொள்கிறேன.

(நாளை வரும்)

# அண்ணா வாரமலர்

## கழக செய்திகள்

### திருச்சி

24-2-79 சனிக்கிழமை மாலை 7 மணிக்கு பெரிய கம்மாளத் தெருவில் க. பழனிவேல் தலைமையில் பேசுவோர் மாயூரம் தப்பி சிவம்: கே. சவுந்தரராசன் எம் எல் ஏ, சி மாணிக்கம், எம் எல் ஏ, ஜி எஸ் நாதன் எஸ் எம் என் அமிருதீன், ஜே தேவதாஸ், கரு அன்பு தாசன், டி வி பரமசிவம், என் நல்லுசாமி, மணலை நெடுமாறன், ஏ ஆறுமுகம் மற்றும் பலர் பேசுவா,

### 31-வது வட்டம்

25-2-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு சென்னை 31 வது வட்டம்குயப்பேட்டை கந்தசாமி கோவில் தெருவில் கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது. ஏ. காந்தி தலைமையில் எம் எஸ் அப்துல்காதர். சந்திரா. அன்புரோஸ், எரியீட்டி ராஜகோபால், வண்ணை கோவிந்தன் மற்றும் பலர் பேசு கின்றனர்.

### குடியேற்றம்

25-2-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு குளக் கரைத் திடலில் டி. சுப்பிர மணி தலைமையில் பேசு வோர். ஜேப்பியார், ஏ கே அரங்கநாதன் எம் எல் ஏ. பட்டு பார்த்தசாரதி, இராச. மாறன் மார்க்க பந்து, அமிர்தப், ஏ. வி. துரைசாமி, இ. முருகன் அண்ணாமலை மற்றும் பலர்.

### திருச்சி

25-2-79 ஞாயிறு மாலை 6-45 மணிக்கு வென்னிஸ் நகர் காந்தி நகர, அந்தோணியார் கோவில் தெரு, சந்திக்கும் இடத்தில் உள்ள எம். ஜி. ஆர். திடலில் கழகப் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது ஜே. டேவிட் துரை ராஜ் தலைமையில் பேசு வோர் பி. ஜே. குமார். கே. பாண்டியன். வி. ஆர். கே. பழனியப்பன் டி. கே. சண்முகம் மற்றும பலர் பேசுகின்றனர்.

## மாயத்தேவர் மக்கள்குறைகளை கேட்டார்

மதுரை, பிப். 23 திண்டுக்கல் நாடாளு மன்றத் தொகுதியிலுள்ள திருமங்கலம் சட்டமன்றத் திற்குள் அடங்கிய திருமங்க லம் யூனியன் திருப்பரங்குன் றம் யூனியன்பகுதியிலுள்ள சுமார் 104 கிராமங்கட்கு மாயத்தேவர் சுற்றுப்பயணம் செய்து மக்களை நேரில் சந் தித்து அவர்கள துகுறைகளை நேரில் கண்டறிந்து கோரிக் கை மனுக்களைப் பெற்றார்.

மாயத்தேவருடன் மதுரை மாவட்ட அண்ணா விவசாய சங்க செயலாளர் சி சீனிவாசன் டாக்டர் நாகராசன், குணாளன் சேகர், கண்ணன் தொகுதி மகளிர் அமைப்பு செயலாளர் பேச்சியம்மாள் கன்னியாஉசிலைநகர அமைப் பாளர் எஸ் எஸ் ராசேந்தி ரன் கனல் ராமச்சந்திரன் பீமன் சுப்ரமணியம் ஆண் டவர் வி கே ராசேந்திரன் மனோகரன் சந்திரசேகரன் ஆகியோர் சென்றனர்.

## கோவை பட்டதாரிகள் தேர்தல்: பார்வையாளர் நியமனம்

சென்னை, பிப். 23. கோவை பட்டதாரிகள் தொகுதியின் சட்ட மேலவை இடைத்தேர்த லுக்கு தேர்தல் பார்வை யாளர்கள் நியமனம் செய் யப்பட்டுள்ளனர்.

தமிழ்நாடு சட்டமன்ற மேலவைக்கு மேற்கு பட்ட தாரிகள் தொகுதியிலிருந்து தேர்ந்து எடுக்க வாக்கெடுப்பு வருகிற மார்ச் மாதம் 2ந் தேதி காலை 8 மணி முதல் மாலை 4 மணி வரை நடைபெறு கிறது. இந்த தொகுதியில் கோவை, சேலம், தரும புரி நீலகிரி ஆகிய மாவட் டங்கள் அடங்கும்.

இந்த தொகுதியின் பார்வையாளர்களாக கோவைக்கு எஸ். எம். நடராசன், தருமபுரிக்கு சி. சங்கர நாராயணன், சேலத்திற்கு ஜார்ஜ்சயீம் நீலகிரிக்கு எஸ். ஏ. சுப்பிர மணியம் ஆகியோர் இந்திய தேர்வு ஆணைக் குழுவினரால் நியமிக்கப் பட்டுள்ளனர்.

தேசிய, மாநில அரசியல் கட்சிகளுக்கும் போட்டி யிடும் வேட்பாளர்களுக்குப் பார்வையாளர்கள் சுற்றுப் பயணவிவரம் அனுப்பபடும். வாக்கெடுப்பின்போதும், வாக்குகள் எண்ணுவதற் கும் மற்றும் புகார்களையுப் பார்வையாளர்கள் கவனத் திற்கு கொண்டுவருவதற்கு இதன் மூலம் வசதி ஏற் படும்.

## எட்மண்ட் வீடு திரும்பினர்

சென்னை, பிப் 23- நெஞ்சுவலி காரணமாக சென்னை, ஜெனரல் ஆஸ் பத்திரியில் கடந்தமாதம் 31ஆம் தேதிமுதல்சிகிச்சை பெற்று வந்த உணவு அமைச்சர் எட்மண்ட் நேற்று (வியாழக்கிழமை) வீடு திரும்பினர்.

அமைச்சர் எட்மண்ட் பூரண குணமடைந்து விட்ட போதிலும் அவ ருக்கு இன்னும் சில காலம் ஓய்வு தேவைப் படுவதால் அவரைப் பார்க்க யாரும் வரவேண்டாம் என மருத் துவர்கள் ஆலோசனை கூறியுள்ளார்கள்.


## தமிழ்நாடு அரசு பரிசு சீட்டு குலுக்கல் முடிவு

### திருத்தம்

குலுக்கல் நாள்: 20-2-79

21-2-79 அண்ணா இதழில் 2ம் பக்கம் வெளியான மேற்படி விளம்பரத்தில்

இருபத்து ஐந்து நான்காவது பரிசுகளின் கீழ்

CU வரிசையில் 965593 என்ற எண் விடு பட்டுள்ளது, சேர்த்துக்கொள்ளவும். மேலும்,
CV வரிசையில் 723451 என்றிருப்பதை 723461 என்றும்
CV வரிசையில் 083829 என்றிருப்பதை 083892 என்றும்
CV வரிசையில் 164714 என்றிருப்பதை 164174 என்றும்
CW வரிசையில் 998231 என்றிருப்பதை 498231 என்றும்

திருத்தி வாசித்துக் கொள்ளவும்.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275 அவ்வை சண்முகம்சாலை சென்னை-600014 என்ற முகவரியி லிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச் சிடுபவர் பி. தங்கராஜன் நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை சென்னை 600004. ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்று கொள்ளப்பட மாட்டாது

நிர்வாகி
"அண்ணா"
அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600 014.



# அண்ணா



எல்லோருக்கும் பொருள்
விஜிபி
புதிய
தவணைத் திட்டத்தில்
வி. ஜி. பன்னீர்தாஸ் & கோ.
சைதாப்பேட்டை - நவுஸ்ட் ரோடு - ரட்டன் பஜார் - தி. நகர்
விழுப்புரம் - வேலூர் - காஞ்சிபுரம் - அரக்கோணம் - செங்கல்பட்டு - செட் ஹில்ஸ்
திருவண்ணாமலை - வந்தவாசி - அந்தமான் - பம்பாய் - புது டில்லி - பெங்களூர்.


# வீடும்-நாடும் நலம்பெற சிறந்தவழி

## குடும்பநலதிட்டம்

### முதல்வர்புரட்சித்தலைவர் கருத்துரை

சென்னை, பிப். 23- வீடும் நாடும் நலம்பெற சிறந்த வழி குடும்ப நலத்திட்டம் தான் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

தேசியக் குடும்பநல முத்தமிழ் விழாவினை ஒட்டி சென்னை நகரில் நேற்று மாலை மாபெரும் அலங்கார அணி வகுப்பு நடந்தது.

முதல்வர் புரட்சித்தலைவர் இந்த அலங்கார அணி வகுப்பை துவக்கி வைத்தார்.

நேரு அரங்கத்தில் இருந்து இந்த அலங்கார அணிவகுப்பு புறப்பட்டது

அலங்கார அணிவகுப்பில் லட்சக்கணக்கானவர் வர்கள் கலந்து கொண்டனர். டாக்டர்கள், நர்சுகள், மருத்துவத் துறையினர், ஆசிரியர்கள், மாநகராட்சித் தொழிலாளர்கள் மற்றும்ஏராளமானபொது மக்கள் நடந்து சென்றனர். திரை உலகக் கலைஞர்களும் இந்த அணிவகுப்பில் கலந்து கொண்டனர்.

அணிவகுப்பு துவக்கவிழாவுக்கு வந்திருந்தவர்களை அமைச்சர் சவுந்தர ராசன் வரவேற்றுப் பேசினார்,

அமைச்சர்கள் ராகவானந்தம், குழந்தைவேலு ஆகியோரும் விழாவில் கலந்து கொண்டனர்.

தேசிய குடும்பநல முத்தமிழ் விழாவினை ஒட்டி நேற்று நடந்த அலங்கார அணிவகுப்பை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார்.

அலங்கார அணிவகுப்பைத் துவக்கி வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

நாட்டு நலனில் அக்கறை கொண்டு நாட்டு மக்கள் நல்வாழ்வுபெற - நாம் உழைக்கும் உழைப்பு அனைவருக்கும் கிடைக்க-- குழந்தைகள் எதிர்காலத்தில் அக்கறைகொண்டு குடும்பநலத்தில் நம்மை கட்டுப்படுத்தி கொள்ள முன்வரவேண்டும்

இப்படிப்பட்ட கருத்துக்களை தமிழகம் முழுவதும் எடுத்துச் சொல்லக்கடமை பட்டு இருக்கிறோம் நாடு முன்னேற அனைவரும் முன் வந்து இந்தப் பணியை ஆற்றுகிறார்கள்

அப்படிப் பணியாற்றும் அனைவருக்கும் ஒத்துழைக்கும் அரசியல் கட்சிகளுக்கும் தமிழக அரசின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்,

நம்முடைய எதிர் காலத்திற்கு எத்தனை குழந்தைகள் வேண்டும் என்பதைக் கருத்தில் கொள்வது நல்லது

### அளவுக்கு மிஞ்சினால்...

அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்று சொல்வார்கள் அதுபோல அதிகமான குழந்தைகள் பிறந்தால்அவைகளைக் கண் காணித்து வளர்ப்பது கடினம்

இத்தகைய கருத்துக்களை பிரசாரத்தின் மூலம்பரப்ப முடியும் இப்படிப்பட்ட உணர்வுகளை உருவாக்க வேண்டும்,

மனம் தூய்மையாக இருக்க வேண்டும். அப்போதுதான் நல்ல திட்டங்களை நிறைவேற்ற முடியும். 15-20 ஆண்டுகட்குப் பிறகு மக்கள் பெருக்கம் எவ்வளவு இருக்கும் என்பவைக் கவனிக்கவேண்டும் இப்போது நாம் நாலரைக் கோடியாக இருக்கிறோம்.

எதிர் காலத்தில் இது 7 கோடியாக மாறினால் இப்போது இருக்கும் விளைச்சல் போதாது,

அது போலத் தான் 20 ஆண்டுகட்கு முன்பு போடப்பட்ட குடிநீர் திட்டம் இப்போது போதாத நிலையில் இறது.

இப்போது நகரில் மக்கள் தொகை35லட்சமாக இருக்கிறது. இது 65 லட்சமாக ஆனால்2 மடங்கு குடிநீர் தேவைப்படும்.

மக்கள் தொகைப்பெருக்கம் ஏற்பட்டால் எதிர் காலத்தில் சிக்கல் ஏற்படும்

ஆகவே குடும்பநலமுயற்சிக்கு அனைவரும் ஒத்துழைப்புத்தர வேண்டும்.

### கலைஞர்கள் பிரச்சாரம்

இப்படிப்பட்ட நல்ல காரியத்தில் கலைஞர்கள் கலந்து கொள்ள முன் வந்திருக்கிறார்கள்.

கலைஞர்களை ஒட்டு மொத்தமாக இந்த நிகழ்ச்சியில் பங்கு பெற வைக்க வேண்டும் என்று இந்த துறை அமைச்சர் மூலம வேண்டுகோள் விடுத்தேன்.

இங்கே வந்திருக்கும் கலைஞர்களுக்கு நன்றி. மற்றும் பல நிகழ்ச்சிகளில் மற்றவர்களையும் பங்கு பெறச் செய்ய வேண்டும் என்று கூறினேன்,

இப்படிப்பட்ட பிரச்சாரத்தை நாட்டுக்காக மதம் ஜாதி பேதம் இன்றி ஒரே உணர்வில் ஒரே நம்பிக்கையில் ஒன்று சேர்ந்து இருக்கும் அனைவருக்கும் தமிழக அரசின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்கு துவக்கப் பட்ட பணி தமிழகம் முழுவதிலும் துவக்கப் படுகிறது இதில் வெற்றிகாணவேண்டும் லட்சோப லட்சம் மக்களிடம் இந்தக் கருத்து எதிரொலிக்க வேண்டும்

இவ்வாறு முதல்வர்புரட்சித்தலைவர் கூறினார்.

பின்னர்குடும்பநலத்துறையின் சார்பில் முத்தமிழ் விழா நடைபெற்றது.

### அமைச்சர்கள்'

அமைச்சர்கள் கே ஏ கே, அரங்கநாயகம் ராஜாமுகமது, சுப்புலட்சுமி ஆகியோர் பேசினார்கள்.

சீரணி அரங்கில் நடந்த பட்டி மன்றத்துக்குஅமைச்சர் சவுந்தரராசன் நடுவராக இருந்தார், குடும்பநல திட்டத்தால் மிகவும் பயன் அடைவது குழந்தைகளே என்று. மன்றத்தில் தீர்ப்பு வழங்கபட்டது.

இறுதியில் அண்ணா நாடக மன்றத்தினரால் அண்ணா எழுதிய 'பார்வதி பி, ஏ' என்ற நாடகம் நடைபெற்றது. கண்ணன் கற்பகவிநாயகம், கரிக் கோல்ராஜ் மற்றும் பலர் நடித்தனர்

---

சுப்புலட்சுமி தகவல்

## கைத்தறி துணி ஏற்றுமதியை உயர்த்தஏற்பாடு

சென்னை, பிப். 23- கைத்தறி துணி ஏற்றுமதியை ரூ 3 கோடி அளவுக்கு உயர்த்த ஏற்பாடு நடப்பதாக அமைச்சர் சுப்புலட்சுமி கூறினார்

சட்டசபையில் கிட்டப்பாவின் கேள்விக்கு பதிலளித்து அமைச்சர் சுப்புலட்சுமி கூறியதாவது:

கைத்தறித் துணி ஏற்றுமதியைஅதிகரிக்க கோஆப்ரேடிவ் இண்டர் நேஷனல் என்ற நிறுவனம் அமைக்கப்பட்டுள்ளது.

நெசவாளர்கூட்டுறவு சங்கத்திலிருந்து ரூ 1 கோடி மதிப்புள்ள கைத்தறி துணிகள் சென்ற ஆண்டு ஏற்றுமதி செய்யப்பட்டன பிரான்சு ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் இவற்றைவாங்கின

இந்த ஆண்டு அதே நாடுகளுக்கு ரூ2கோடி அளவுக்கு கைத்தறித் துணிகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

வரும் ஆண்டில் ரூ. 3 கோடி மதிப்புள்ள துணிகள் ஏற்றுமதி செய்ய முயற்சி நடக்கிறது. ஆஸ்திரேலியா போன்ற நாடுகளுக்கு பட்டாடை ஏற்றுமதிசெய்யும் முயற்சியும் உள்ளது நவீன ரகத் துணிகளை நெய்யதறிகளில் மாற்றம் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது

இவ்வாறு அமைச்சர் சுப்புலட்சுமி கூறினார்,

---

### தமிழ்ச்செல்வன் நிகழ்ச்சிகள்

பிப், 24 காந்திபுரம் (21-வது வட்டம்) 25- பெங்களூர் (கலாசிபாளையம்) 26-வெள்ளக்கோவில் நகர், 27- சத்தியமங்கலம் நகர் 28- ஈரோடு மார்ச் 1- கவுந்தப்பாடி 2-பவானி சாகர் புளியம்பட்டி,

### நல்லாற்று நடராசன் நிகழ்ச்சிகள்

பிப், 24- வெள்ளப்பள்ளம், 25- காரைக்கால், 27- புத்தூர், 28- மதுரை, மார்ச் 1-2- தஞ்சை 3- திருநள்ளாறு, 4- புதுவை.

---


அகில இந்திய
சுற்றுலா
வர்த்தக
பொருட்காட்சி

பொருட்காட்சி மைதானம்
போர் நினைவுச் சின்னம்
மைதானம் எதிரில்
சென்னை-9
போன் 21566/67

விசேட அம்சங்கள் :
கண்கவர் அரங்குகள், ரங்கோலி, பாப்புபண்ணை - சிறுவர் ரயில் - ராட்சத ராட்டினம் - உல்லாசப் படகு- திரைப்பட நடிகர் நடிகைகளின் நாடகம் நடனம் மற்றும் இன்னிசை நிகழ்ச்சிகள்- கரகம், காவடி முதலிய கிராமிய நடனங்கள்

பொருட்காட்சி 11-3-79
வரை நீடிக்கப்பட்டுள்ளது

அத்தாட்சியுடன், ஆசிரியர்களுடன் வரும் பள்ளி மாணவர்களுக்கு சலுகை கட்டணம் உண்டு, காணவாரீர் பயனடைவீர்?

அறிஞர் அண்ணா
கலையரங்கம்
செல்வி டி. கே. கலாவின்
ஒலியும், ஒளியும்
மற்றும் மெல்லிசை
(Musid - Vision & Light Music
திறந்த வெளி
திரைப்படக் காட்சி
மக்கள் திலகம்,
நடிகர் திலகம்
இணைந்து நடிக்கும்
கூண்டுக்கிளி

பொருட்காட்சி நேரம், மாலை 3 மணி முதல் இரவு 10மணி வரை

நுழைவுக் கட்டணம் :
0.75 பைசா
சிறுவர் கட்டணம் :
0.50 பைசா

காட்சி முடிந்தவுடன் பஸ் வசதி உண்டு.


---

## மு.க. முத்துவை கைது செய்யநீதிபதிஉத்தரவு

சென்னை, பிப். 23- நீதிமன்றத்துக்கு 3 முறை வராததால் மு க முத்து வைக் கைது செய்து கொண்டு வரும்படி நீதிபதி உத்தரவிட்டார்.

நடிகை மஞ்சுளா வீட்டிற்குச் சென்று குடி போதையில் கலாட்டா செய்ததாக கருணாநிதியின் மகன் மு. க. முத்துவின் மீதும், தொழில் அதிபர் கபார்கான் மீதும் நீதி மன்றததில் வழக்கு நடந்து வருகிறது.

இந்த வழக்கில் கடந்த மூன்று முறை நீதிமன்றத்துக்கு வராமல் வக்கீல் மூலமாக மு க முத்து மனு தாக்கல் செய்திருந்தார்.

இந்த வழக்கு சென்னை சைதாப்பேட்டை 9-வது மெட்ரோபாலிடன்மாஜிஸ்திரேட் கோர்ட்டில் விசாரணைக்கு வந்தது. தொழில் அதிபர் கபார்கான் மட்டும் கோர்ட்டுக்குவந்திருந்தார் மு க முத்து வரவில்லை அவர் சார்பில் அவரது வக்கீல் சந்திரன் ஜெயபால் ஆஜராகி, மு க முத்துக்கு உடல் நிலை சரியில்லை" என்று கூறி மனுதாக்கல் செய்தார்,

இந்த மனுவை மாஜிஸ்திரேட் முத்துராமலிங்கம் ஏற்றுக் கொள்ளவில்லை,

மு க முத்துவை கைது செய்து கொண்டு வரும்படி உத்தரவு பிறப்பித்தார்,

### தொலைக் காட்சியில் ராமபத்திரன்

சென்னை, பிப். 23- குடிசைமாற்று வாரியத் தலைவர் ராமபத்திரன் இன்று (வெள்ளிக்கிழமை) இரவு 9-15மணிக்கு டெலிவிஷனில் உரையாற்றுகிறார்

சாடம்பாறை

### நீர்மின் திட்டப் பணியை முதல்வர் துவக்குகிறார்

சென்னை, பிப். 23- காடம்பாறை நீர் தேக்க, நீர் மின் திட்டப் பணியை வருகிற மார்ச் மாதம் 2-ந் தேதி பிற்பகல் 3 மணிக்கு முதல்வர் புரட்சித் தலைவர் துவக்கி வைக்கிறார்,

இந்த திட்டம் நிறைவேறினால் முதலில் 200 மெகாவாட் மின்சாரம் கிடைக்கும். படிப்படியாக 400 மெகாவாட் மின்சாரம் கிடைக்கும்,

---

### கழக எம் எல் ஏ அறிவிப்பு

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சிலர் என்மீது வீண் களங்கம்கற்பிக்கவேண்டும் என்ற தியநோக்கத்தோடு இதுபோன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறார்கள்

எனவே இம்மாதிரியான பொய்யான, அவதூறான, விஷமத்தனமான உள்நோக்கம்கொண்ட செய்திகளை நம்பவேண்டாம் என்று அனைவரையும் கேட்டுக்கொள்கிறேன்

### நடவடிக்கை

என் பெயருக்கும், நான் சார்ந்துள்ள அரசியல் கட்சிக்கும் களங்கம் கற்பிக்க முயல்பவர்கள் மீது சட்டபூர்வமானநடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்பதையும்தெரிவித்துகொள்கிறேன்,

இவ்வாறு கந்தசாமி கூறியுள்ளார்:

### தமிழில் சட்டங்கள்

சென்னை, பிப். 23- குற்றவியல் நீதிமன்றங்களில் தமிழில் தீர்ப்பு அளிக்க வேண்டும் என்று உயர் நீதி மன்றம் ஆணையிட்டிருப்பதால் குற்ற இயல் நீதி மன்றங்கள் செயல் படுத்தும் சட்டங்களை தமிழ்ப்படுத்தும் வேலைக்கு முன்னுரிமை தரப்பட்டு வருகிறது என்று சட்ட அமைச்சரின் பேரவை செயலர் எம். ஜெயவேலு இன்று ஒருகேள்விக்கு பதில் அளிக்கையில் கூறினார், சிவில் நீதிமன்றங்கள் பயன் படுத்தும்சட்டங்கள் மத்திய மாநில அரசு சட்டங்கள் இவற்றை தமிழில் கொண்டு வரும் பணி அதற்கான குழுவிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது என்றும் பேரவை செயலர் ஜெயவேலு தெரிவித்தார்

---

## நில உச்சவரம்பு சட்டம்: கழக அரசின் புரட்சிகர திட்டம்

### கழக உறுப்பினர்கள் பேச்சு

சென்னை, பிப். 23- நில உச்சவரம்புச்சட்டம் கழக அரசின் புரட்சிகரத திட்டம் என்று சட்டசபையில் கழக உறுப்பினர்கள் கூறினார்கள்

சட்டசபையில் நிலஉச்ச வரம்பு திருத்த சட்ட விவாதத்தில் கலந்து கொண்டு கழக உறுப்பினர் துரைகோவிந்தராஜன் பேசியதாவது:

ஜனநாயகம் சோஷலிசம் கம்யூனிசம் ஆகியவைகளை இணைத்து அதில் அண்ணா இசத்தை கலந்து இந்த சட்டம் கொண்டு வரப் பட்டுள்ளது.

இதில் ஒன்றும் இல்லை என்று பேசுகிறார்கள். நில உச்சவரம்பு சட்டத்தின் மூலம் ரூ 2 லட்சம் ஏக்கர் எடுக்கப்பட வேண்டும். 90 ஆயிரம் ஏக்கர் எடுக்கப் பட்டு இருக்கிறது.

ஒருலட்சத்து 44 ஆயிரம் ஏச்கருக்கு பணம் ஒதுக்கிடு தரப்படவில்லை

ஒருஏக்கருக்குரு 15 ஆயிரம் கூட தரப்பட்டு இருக்கிறது இனி அது பொன் விளையும் பூமியாக இருந்தால் கூட ரூ 3500க்கு மேல்கிடையாது

இப்படிப்பட்ட சட்டத்தை தப்பாராட்டாமல் இருக்க முடியாது,

மேற்குவங்கம், கர்நாடகம் போன்ற மாநிலங்களுக்கு முன்னோடியாக அவர்கள் பாராட்டும்படி இந்தசட்டம் இருக்கிறது. அவர்கள் தரும் தொகையை விட இங்கு குறைவாக நிர்ணயிக்கப்பட்டுஇருக்கிறது.

திருச்சி சவுந்தரராசன் (கழகம்) எப்படி வரவேண்டுமோ அப்படி சட்டம் வந்திருக்கிறது முன்பு மார்க்கெட் விலையைவிட அதிகம் தரப்பட்டது இப்போது நிலைமை மாறுகிறது இது ஒரு புரட்சிகரயான சட்டம் என்றார்.

---

## மதுரை-முகவை மாவட்ட அண்ணா நெசவாளர் தோழர்கட்கு

மதுரை, முகவை மாவட்ட அண்ணா கைத்தறி நெசவுத் தொழிலாளர், சங்கப்பேரவை கூட்டம் 25--2--79 ஞாயிறு காலை 10 மணிக்கு மதுரை சித்திரக்குளம் அருகில் உள்ள காசிராம் லாட்ஜில் நடக்கும் அச்சமயம், நூல்விலை ஏறுவது, கைத்தறி நெசவுத் தொழில், தொழிற்சங்கங்கள் பற்றி ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படும். இதனையே அழைப்பாக ஏற்று தங்கள் நெசவாளர் சங்கப்பிரதிநிதிகளை உடன் அழைத்து வர வேண்டுகிறேன்,

அனகாபுத்தூர், சி. ராமலிங்கம், எம்.எல்.சி.,
செயலாளர், கைத்தறி நெசவாளர் பிரிவு,
அண்ணா தொழிற்சங்கப்பேரவை சென்னை

---

## கோமதியின் கோபம்...

(3ம் பக்கத் தொடர்ச்சி)

'ஷிப்டுக்கு' ஆஜராயிற்று ஈசிச்சேரில் சாய்ந்த வண்ணம் கவலை நிறைந்த நினைவுகள் மூளையை மொய்க்க தூங்கிய பாவனையில் கிடந்த சந்திரனை கோமதி அழைத்தாள்.

'நேரமாச்சு.. சாப்பிட வாங்க' பெருமூச்சு விட்டவாறு எழுந்த அவன் மெளனமாய் சாப்பாட்டின் முன் அமர்ந்தான் கோமதி அவனது கவலைகள் சீற்றம் எல்லாவற்றையும் மறந்து வழக்கம்போல் பரிமாறிக் கொண்டிருந்தாள்.

"என்னங்க.."

"ம்..:"

"எங்க சித்தி மகள் இன்ப ஜோதி குழந்தை பெத்து இருக்காளாம்... போய்ப் பார்த்துட்டு வந்துடுவோமா?"

"செலவுக்குப் பணம் வேணுமேஎங்கேபோறது"

"......"

"அப்புறமா பார்க்கலாம்"

"அதுக்கில்லே நமக்கு குழந்தபொறந்தப்ப.. அவள் இங்கேயே தங்கி என் கூட இருந்து எல்லாத்தையும் கவனிச்சாள். நாம்..அந்த அளவுக்குச் செய்யாட்டியும்..ஏதோ ஒரு நாள் போய்ப் பார்த்துட்டு வந்தட்டா...நல்லாருக்கும்னு நினைக்கிறேன்!'?

விருட்டென்று ஏறிட்டுப் பார்த்தான் அவன்பார்வை ஈட்டியாய் பாய்வது போன்ற ஒரு கொடிய உணர்ச்சி.

"நீ...நெனைக்கிறநெனைப்பெல்லாம்நடக்கமுடியுமா? எவன் கிட்டே இருக்குது பணம்? நாய் மாதிரிஇப்படி குலைச்சிக்கிட்டேயிருந்தா.. மனுஷன் நிம்மதியா சாப்பிடமுடியுமா?...சேச்சே!"

"இப்போ...நான்என்ன சொல்லிட்டேன்? ஏன்கத்து நீங்க?"

அவன்மனதிற்குள்கடைக்காரனும் கடிதம் அனுப்பிய அம்மாவும் தான் ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தார்கள்;

கோமதி கண்களை கசக்கினாள்,

"ஏன் இப்போ அழுது தொலைக்கிறே நீ கண்ணீரை வடிக்கிற மாதிரி நானென்ன செத்தா போய்ட்டேன், அதான் குத்துக்கல்லு மாதிரி உக்காந்திருக்கேனே!"

சந்திரன் வாயிலிருந்து சிதறிய வார்த்தைகள் கோமதியின் நெஞ்சைச் சுட்டது.

"இன்பஜோதி வீட்டுக்குப் போறது பிடிக்கலேன்னா... சொல்லிட வேண்டியது தானே... அதுக்காக ஏன் இப்படி யெல்லாம் பேசணும்?

"இந்தா....சும்மா பொலம்பிகிட்டேயிருக்கக்கூடாது. தங்கச்சிவீட்டுக்குப் போறவளை எந்த பயல் தடுத்தான்? நீ போறதுன்னா இப்பவேணுமானாலும்-போகலாம்..!" என்று கூறிவிட்டு கோபத்தோடு வெளியேறினான்.

கோமதி சாப்பிடவில்லை; பச்சைத் தண்ணீரைக் கூட பல்லில்ஊற்றாமல்அப்படியே பாயை விரித்து படுத்து விட்டாள் கண்களின்மடை திறந்து கண்ணீரைவடித்து தீர்த்தாள்!

அடிபட்டு அழுதுஓய்ந்து தூங்கும்குழந்தையைபார்க்கும் தாய்மை உணர்ச்சியுடன்இரக்கத்துடன்கோமதியை பார்த்து கொண்டிருந்தவன் அடிதொண்டையில் கிசுகிசுப்பது போல் கொஞ்சலாகக் கூப்பிட்டான்.

"ஏய் இந்தா இங்கே பாரு ஏய் கோமதி! அவளது காதோரத்தில்கிடந்த மயிர்கற்றையை ஒதுக்கி காதுக்கு கீழ்ப்புறத்தில் தடவி 'கிச்சுக்கிச்சு காட்டினான் கூச்சத்தால் உடல் சிலிர்த்துஎரிச்சலுடன்கண் விழித்து அவனைப் பார்த்தாள்.

ஏய்...,கோமதி...இங்கே பாரு..நான் என்ன சொல்றேன்னா.." அவன் வார்த்தைகள் தேனாக குழைந்தது. அவள் முணுமுணுத்தாள்.

"நாய்கிட்டே என்னத்தைச்சொல்றது.."" நேரம் பார்த்துக் குத்தலாகச் சொன்னாள்.

"இந்தா...இதெல்லாம் அப்போ!"

"இப்போ....?"

உன்னை வேணும்னு பேசலே... அப்போ என் மனசே சரியில்லே. ஏதோ பேசிட்டேன். அப்புறம் அதைப்பத்தி எவ்வளவு வருத்தப்பட்டேன் தெரியுமா?

"உங்களுக்கு மனசு சரியில்லேன்னா... நான்தான் இளிச்ச வாயாக்கும்... திட்டுறதுக்கு?" குத்தலாசுக் கேட்டாள்

"ஆமாம்...நீதான் என் பொண்டாட்டி!" குழந்தைத்தனமாகக் கொஞ்சினான்.

"பொண்டாட்டின்னு காரணமில்லாமெ ..திட்டலாமா?"

"ஓ...தாராளமா... உன்னைத் திட்டாமே, வேறே எவளைத்திட்டுறது? உனக்கு நான் புருஷன் தானே,,"

"ஆமா..."

"நீவேணும்னா இப்போ பதிலுக்கு திட்டி விடு, சரிக்குச்சரியா போயிடட்டும்!"

அவனது பேச்சு அவளை "குபுக்" கென சிரிக்க வைத்தது. அவள் உள்ளம் மலர்ந்து இருந்தாலும், "பதிலுக்கு திட்டிக்கோ" என்றவுடன் அவளுக்கு வெட்கமாகப் போய் விட்டது. நாணம் கலந்த புன்னகை பூத்தாள்,

கொஞ்சலாக அவள் கன்னத்தை கையில் ஏந்தியவாறே "அடடா இந்த அழகான கோமதி வாடுற மாதிரி நெருப்பு போல் பேசிவிட்டேன் அது ஏன்னு ரொம்ப நெருக்கடி..பணக்கஷ்டம் ...மனக்குழப்பம், ஆனால் அதுக்கு நீ என்ன செய்வே? ஏதோ...அந்த நேரம் உணர்ச்சியிலே முரட்டுத்தனமா ... கத்திவிட்டேன்"

கோமதி 'கலகல'வென்று குலுங்கிச் சிரித்தாள் அவன் புரியாத குழப்பத்துடன் "ஏன்சிரிக்கிறே?" என்றான்,

"இல்லே உங்களை இப்ப சொன்னீங்க நீங்களாகவே உங்களை திட்டிக் கிட்டீங்களே அதைநெனைச்சுத்தான் சிரிச்சுட்டேன்! என்றாள் சிரிப்பை அடக்க முடியாமல்.

அவனும் சிரித்தவாறு அவளை அப்படியே அள்ளியணைத்துக் கொண்டான்,